# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 13
இதழ் 11

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
'மாம்பலம் குருகுலம்'
No. 2, ஸ்டேஷன் ரோடு, w. மாம்பலம்
சென்னை—17.

சார்வரி௵
ஆவணி௴

## யஜுர்வேத ஸந்த்யா வந்தனம்.

( ஐந்தாம் பதிப்பு. )

ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம், பதவுரை, கருத்து, ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்கள், சில புதிய விஷயங்கள் அடங்கியது.

விலை ரூ. 1—50. V. P. P. யில் அனுப்பினால் ரூ. 2—25.

கிடைக்குமிடம் :— ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா, 'மாம்பலம் குருகுலம்' 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம், சென்னை 17.

## விநாயக சதுர்த்திவரை மலிவான விலை!

விநாயக புராணம் ரூ. 2—50. விநாயக ஸஹஸ்ரநாமம் (ஸம்ஸ்கிருதம்-தமிழ் அர்த்தம்) ரூ 1-00. விநாயக சதுர்த்தி பூஜை, கதை 25 ந. பை. ஆகிய மூன்றையும் சேர்த்து வாங்கினால் **சந்தாதாரர்களுக்கு மாத்திரம்** (மொத்த விற்பனைக்கில்லை) 3 ரூபாயுக்கே அளிக்கிறோம். **தனித்தனி வாங்கினால் உள்ள விலைதான்.** V. P. ஆனால் ரூ. 3—78. ஸாதாரண புக் போஸ்டுக்கு முன்பணம் அனுப்பினால் ரூ 3—25 மாம்பலம் குருகுலத்திற்குத்தான் எழுதவேண்டும்.

**ஸௌபாக்ய அஷ்டோத்ர ஶதநாம 26 ந. பை.**

**ஸ்ரீ லலிதா அஷ்டோத்ர ஶதநாம 26 ந. பை. நாகரம் தமிழ் அர்த்தத்துடன். தபால் ஸ்டாம்பு அனுப்பிப் பெறுக.**

கிடைக்குமிடம் :—

ஆசிரியர் : **ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,**
**"மாம்பலம் குருகுலம்"**
**No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்,**
**சென்னை—17.**

சார்வரி௵ ஆவணி௴ வருஷருது· தக்ஷிணாயனம்.

| தமி. | | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 16 | செவ். | தச. | 55-15 | ரோ. | 17-57 | அ.சி. | — |
| 2 | | 17 | புதன் | ஏகா. | 60-00 | மிருக. | 25-15 | சி. | ஏகா. |
| 3 | | 18 | வியா | ,, | 1-20 | திரு. | 32-45 | ம.அ. | த்வா. |
| 4 | | 19 | வெள். | த்வா. | 7-20 | புன. | 40-00 | சி. | த்ர. |
| 5 | | 20 | சனி | த்ர. | 12-53 | பூச. | 46-38 | சி. ம. | சது. |
| 6 | | 21 | ஞா. ● | சது. | 17-48 | ஆயி. | 52-33 | சி. ம. | அமா |
| 7 | ஆகஸ்ட்௴ | 22 | திங். | அமா. | 21-48 | மகம் | 57-35 | ம. | — |
| 8 | | 23 | செவ். | ப்ர. | 24-50 | பூரம் | 60-00 | சி. | ப்ர. |
| 9 | | 24 | புதன் | த்வி. | 26-45 | ,, | 1-33 | அ. | த்வி. |
| 10 | | 25 | வியா. | த்ரி. | 27-35 | உத். | 4-28 | ம. சி | த்ரி. |
| 11 | | 26 | வெள். | சது. | 27-18 | ஹஸ். | 6-18 | அ.சி. | சது. |
| 12 | | 27 | சனி | பஞ். | 25-48 | சித். | 6-58 | ம. அ. | பஞ். |
| 13 | | 28 | ஞா. | ஷஷ்ட். | 23-10 | சுவா. | 6-28 | சி. | ஷ.ச |
| 14 | | 29 | திங். | ஸப். | 19-23 | விசா. | 4-50 | ம. சி. | அஷ் |
| 15 | | 30 | செவ் | அஷ்ட | 14-33 | அனு. | 2-10 | சி. | நவ. |
| | 1960௵ | | | | | கேட். | 58-30 | அ. | — |
| 16 | | 31 | புதன் | நவ. | 8-45 | மூல. | 54-00 | ம. அ. | தச. |
| 17 | | 1 | வியா. | தசமி | 2-13 | பூரா. | 48-58 | சி. | ஏகா. |
| | | | | ஏகா. | 55-08 | | | | |
| 18 | | 2 | வெள். | த்வா. | 47-45 | உத்ரா | 43-35 | சி. ம. | த்வா. |
| 19 | | 3 | சனி | த்ர | 40-23 | திர. | 38-15 | சி. | த்ர. |
| 20 | | 4 | ஞா. ○ | சது. | 33-20 | அவி. | 33-10 | ம. சி. | சது. |
| 21 | | 5 | திங். | பௌ. | 26-58 | சத. | 28-40 | சி. ம. | பௌ |
| 22 | ஸெப்டம்பர்௴ | 6 | செவ். | ப்ர. | 21-33 | பூரட். | 25-13 | ம. அ. | ப.த். |
| 23 | | 7 | புதன் | த்வி. | 17-25 | உத்ர. | 23-05 | சி. | த்ரி. |
| 24 | | 8 | வியா. | த்ரி. | 14-50 | ரேவ. | 22-30 | சி. அ. | சது. |
| 25 | | 9 | வெள். | சது. | 14-00 | அசு. | 23-35 | அ.சி. | பஞ். |
| 26 | | 10 | சனி | பஞ். | 14-57 | பர. | 26-30 | சி. அ. | ஷஷ்ட் |
| 27 | | 11 | ஞா. | ஷஷ்ட். | 17-40 | கிரு. | 31-02 | சி. | சப். |
| 28 | | 12 | திங். | ஸப். | 21-52 | ரோ. | 36-57 | அ. | — |
| 29 | | 13 | செவ். | அஷ்ட். | 27-15 | மிருக. | 43-52 | சி. ம. | அஷ் |
| 30 | | 14 | புதன் | நவ. | 33-15 | திரு. | 51-17 | சி | நவ. |
| 31 | | 15 | வியா. | தசமி | 39-22 | புன. | 58-37 | அ. | தச. |

3, 17உ ஏகாதசி, 4, 19 ப்ரதோஷம், 6உ அமாவாசை, 11உ விநாயக சதுர்த்தி, 20உ பௌர்ணமி, 26உ க்ருத்திகை.

**மனைவியின் பிரிவு ஸஜ்ஜனங்களின் அபவாதம்**

यतोः धर्मः ततः कृष्णः

# வைதிக தர்ம வர்த்தனீ

यतः कृष्णः ततो जयः



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரிஸு ஆவணிமீ | இதழ் 11



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.

தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம்:

வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# வைதிக கர்மாவில் டாம்பீகம் வேண்டாம்.

ஒன்றைச் சுத்தப்படுத்துவது அல்லது அழகுபடுத்துவது ஸம்ஸ்கார மெனப்படும். ஜீவன் அணுவாயினும் தீயைப்போல் பிரகாசமானது. தீயைப் புகை மறைப்பதுபோல் ஜீவனை அவித்யை மறைக்கின்றது. அழுக்குள்ள பாத்திரத்தைத் தேய்த்து அதனழுக்கை அகற்றுகிறோம். பழகிய ஸ்வர்ண ஆபரணத்திற்கு மெருகு கொடுத்து அழகு படுத்துகிறோம்.

அநாதியான அவித்யா மலமுள்ள ஜீவனை கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களால் அழுக்கை அகற்றி சுத்தமாகச் செய்கிறோம். கர்பாதாநம் பும்ஸவந ஸீமந்தம் ஜாதகர்ம நாமகரணம் அன்ன ப்ராசநம் சௌளம் என்ற ஸமஸ்காரங்கள் ஆனபின் உபநயநம் செய்கிறோம். இது வேதாத்யயநம் செய்வதற்காக மறுபிறவி போலாகும். இதை எட்டுவயதிற்குள் செய்யவேண்டும். கஷ்டகாலத்தில் பதினாறு வயதிற்குள்ளாவது செய்தே ஆகவேண்டும்.

பெண் கல்யாணத்துடன் சேர்த்து செய்வோமென நாமதிப்பது தர்மமல்ல. அரைகுறையாக விஷயமறிந்தவர் மூத்த பெண்ணுக்கு ஜாதகாதிகளைச் செய்யாமல் சிறுவனுக்குச் செய்யலாமா? என ஸந்தேஹப்படுகின்றனர். பெண்களுக்கு ஜாதகாதி மந்திரமின்றி செய்வதால் உபநயந ஸ்தாநத்தில் கல்யாணமே அவர்களுக்கு முக்யமாகும். சிலர் 3 பிரும்மசாரி வீட்டிலிருக்கக் கூடாதெனக் கூறுகின்றனர். அதுவும் சாஸ்த்ர ஸம்மதமன்று.

நெருங்கிய (பெண், மாப்பிள்ளை, அண்ணன், தம்பி, மாமன், மாமி) பந்துக்களை மாத்ரம் அழைத்து ஏகாந்தமாக சாஸ்த்ரப்படி உபநயநம் செய்யவேண்டுகிறோம். செல்வமுள்ளவர்கள் எல்லோரையும் அழைக்கட்டும். ஆனால் மேளம், கச்சேரி, பார்டி முதலிய வீண் படாடோப செலவு வேண்டாம். செல்வமுள்ளோர் ஏழையான பந்து புத்ரர், குரு புத்ரர், பந்துவில்லா எழைப் பிள்ளை இவர்களுக்குத் தன் புத்ரன் உபநயநத்துடன் சேர்த்து செய்யட்டும்.

அமங்கள சொல் காதில் விழவேண்டா மென்பதற்காக மங்களமான மேளம் வைக்கப்படுகிறது. அந்த மேள சப்தம் ஒருமந்த்ரமும்—முக்யமான காயத்ரீ கூட—குழந்தை காதில் விழாதபடி செய்கிறது. வடநாட்டிலுள்ள நம்மவர் (கிடைக்காததால்) விவாஹத்திற்குக்கூட மேளம் வைப்பதில்லை. செல்வமும் ஆசையுமிருந்தால் அதை வெகு தூரத்தில் வாசிக்கும்படிச் செய்யட்டும்.

உபநயநம் வைதிக ஸம்ஸ்காரம் மாத்ரமல்ல. புத்ரனின் ஆயுஸ் ஆரோக்யம் வளரவும் மந்த்ரங்களால் வேண்டுகிறோம். 40 ஸம்ஸ்காரம் என்ற (ரூ. 1—4—0) நமது பிரசுரத்தை உபநயநம் செய்து கொள்ளும் வடுவும் செய்துவைக்கும் குருவும் முன்னதாகப் படித்தால் அதன் பெருமையை உணர்வர்.

ஸகல ஸ்தூல பலனும் பயனல்ல !! காயத்ரீ பலமே பலம் !! என கண்டார் விச்வாமித்ரர். குழந்தைகளை பவிஷ்டராகச் செய்யுங்கள்

---

**கடனின் பாக்கி, அயோக்யனை ஸேவிப்பது**

## தார்மிகச் செய்திகள்.

**அகில பாரத வித்வத் ஸபை:** சென்னையில் விஜயம் செய்திருக்கும் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு விநாயக சதுர்த்தி வாரத்தில் ஷை ஸபை நடத்தி வித்வத் ஸம்பாவனை செய்யப் போகிறார்கள்.

**கீதாவார மஹோத்ஸவம்:** ஸ்ரீ S. N. த்விவேதி என்ற ஓய்வு பெற்ற இன்கம் டாக்ஸ் ஆபீஸர் சென்னை ஹிந்து ஹை ஸ்கூலில் 3 ஆண்டுகளாக கீதை உபன்யாஸம் செய்த பூர்த்தியில் ஒருவாரம் பற்பல பண்டிதர்களையும் லௌகிகர்களையும் கொண்டு கீதோபன்யாஸம் செய்வித்தார். ஆங்கிலத்திலும் உபன்யாஸம் செய்து லௌகிகர்களை ஆஸ்திகராக்குவதும் தன்னலங்கருதாமல் பிரசாரம் செய்வதும் சிறந்தது.

**மூன்று வேத பாராயணம்:** ஆவணி கடைசியில் திருவாமாத்தூர் என்ற கோமாத்ருபுரத்தில் (பசுக்கள் இங்கு தவம் செய்து கொம்புகளைப் பெற்றதாக வேதம் கூறுகிறது). பல்லாண்டுகளுக்குப்பின் கும்பாபிஷேகம் நடக்கிறது. அச்சமயம் 3 வேதமறிந்தவர்களையும் பாராயணம் செய்யச் சொல்லி ஸமாராதனையும் ஸம்பாவனையும் அடியேன் மூலமாக நடக்கின்றது.

**ஸத்பாத்ர தானத்திற்கேற்ற ஸமயம்:** வேதமறிந்தவர் குக்ஷிக்கு அன்னமிடுவதும் அவர்க்குத் தக்ஷிணை தருவதும் பெரும் புண்யம். சுமார் ஆயிரம் ரூபாய் செலவாகிறது. சிவ தர்மம் வேத தர்மம் இரண்டும் சேர்ந்துளது. இப்புண்யத்தை நன்குணர்ந்து ஸௌகர்யமிருந்தால் இதில் பங்கெடுத்துக் கொள்ளலாம். முடிந்த அளவு M. O. மூலம் மாம்பலம் குருகுலத்திற் கனுப்பவும்.

---

## சந்தாதாரர்களுக்கும் ஏஜண்டுகளுக்கும் ஓர் விக்ஞாபனம்.

13-வது ஆண்டு முடிய இன்னும் 1 மாதமே பாக்கி இருக்கிறது. சார்வரி ஐப்பசி முதல் 14-வது ஆண்டு ஆரம்பம். 14-வது ஆண்டிற்கு பேப்பர், மற்றய சாமான்கள் முன்னதாக சேகரம் செய்ய வேண்டியதால் தயை கூர்ந்து 13வது ஆண்டுக்காக சந்தாசெலுத்தவேண்டிய சந்தாதாரர்களும், ஏஜண்டுகளும், 14வது ஆண்டுக்காக முன்னதாக சந்தா அளிக்கும் அன்பர்களும், கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பிவைக்கவேண்டுகிறோம்.

N. B:- 13-ம் ஆண்டிற்காக சந்தா செலுத்த வேண்டியவர்களுக்கு தனித்தனியாக கார்டும் போட்டிருக்கின்றன.

மானேஜர், வைதிக தர்மவர்த்தனீ, கடவாசல்,
வடகால் போஸ்ட், சீர்காழி வழி. (தஞ்சை ஜில்லா.)

---

**ஏழையாயினபின் பிரியமானவரைக் காணுதல்
இவ்வைந்தும் தீயில்லாமலே உடலைக் கொளுத்தும்.**

# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

( ஆடிமீ தொடர்ச்சி )

*(5)* **तन्तुंतन्वन्**–ஹவிர்பாகமே ! என்னால் கொடுக்கப் பட்ட ஹவிஸ்ஸை விஸ்தரித்து மழை பெய்வதற்காக ஆதித்யனைப் பின் தொடர்ந்து செய்வாய், ( **अग्नौ प्रास्ताहुतिः सम्यगादित्यमुपतिष्ठते. आदित्याज्जायते वृष्टिः वृष्टेरन्नं ततः प्रजाः** அக்னியில் நாம் ஹோமம் செய்த ஹவிஸ் சூர்யனை யடைந்து பிறகு அங்கிருந்து மழையாக பெய்து தான்யாதிகள் விருத்தியாகி பிரஜைகளும் வ்ருத்தியடைகின்றனர்.) ஸத் புத்தியினால் (கர்மாவினால்) தேடிய மார்க்கத்தை மிக பிரகாசமுள்ளதாகச் செய்து யஜமானனைக் காப்பாற்றும். நிர்விக்னமாக ஆரம்பித்த கர்மா பூர்த்தியடைய விரும்பும் எங்கள் கர்மாவை ஏற்றதாழ்வில்லாமல் செய்யும். மனுபோல் ஆகி யஜமானனை தேவ ஜனமாக செய்வாய். (இதனால் நாம் தெரிந்துக் கொள்ளவேண்டியது நாம் நமது கர்மாவை சரிவர அனுஷ்டித்து அதன் பலனை யடைந்து கடைசியில் நாமும் தைவிக தன்மையை யடைவோம் என்று) *[காண் 3. ப்ர 4: அனு 2]*

*(6)* **उद्बुध्यस्व** - அக்னி தேவனே நீர் எங்களிடம் ப்ரீதியுள்ளவராகி யஜமானனைத் தினந்தோறும் ஜாகரூகனையும் ஸாவதானனுகவும்செய்யும். நீரும் யஜமானனும்சேர்ந்து ஶ்ரௌதஸ்மார்த்த கர்மாக்களைச் செய்யுங்கள். யஜமானனே! உம்மை ரக்ஷகனையும் யுவாவாகவும் அடிக்கடி செய்துக் கொண்டு இந்த அக்னி உம்மை காரணமாக வைத்து யக்ஞாதி கர்மாக்களின் ப்ரவாஹத்தை இடைவிடாமல் ஸம்பாதித்துக் கொடுக்கட்டும். *[கா 4. ப்ர 7. அனு 13 ]*

*(7)* **त्रयस्त्रिँशत्तन्तवः** - தேவர்கள் முப்பத்தி மூன்று பாகமாக பிரிந்திருக்கிறார்கள். மனிதர்களில் யாராவது எந்த தேவதையை உத்தேசித்து ஹோமம் செய்தபோதிலும் உத்தேசித்த தேவதையிடம் அந்த ஹவிர்பாகத்தை

---

**புஸ்தகம் ஸ்த்ரீ பணம் இவை பிறரிடம் சென்றால் திரும்பா**

அக்னி பகவான் சேர்ப்பிக்கிருர். அந்தப்படி நாம் செய்யக்கூடிய ஹவிஸ் அந்த தேவதையை அடையவேண்டும்.

8 முதல் 11 வரையில் வ்யாஹ்ருதி ஹோமங்கள். ஆக இந்த பதிஞேரு ஹோமங்களும் அதிகமாக செய்யப்படுகின்றன, இவற்றிற்குக் காரணம்? முதலில் செய்யும் ஹோமத்தின் காரணம்? அக்னியில் அஶுத்த த்ரவ்யம் அல்லது தீர்த்தம் முதலியன சேர்ந்த தோஷ நிவ்ருத்திக்காகச் செய்வது. 2 வது ஹோம காரணம்—சில அங்கங்கள் விட்டுப்போயிருப்பது சேருவதற்காகச் செய்வது. 3 வது ஹோமம். ஹோமம் செய்யவேண்டிய இடத்தை விட்டு ஹோமம் செய்தாலும் ஹோமம் செய்யவேண்டிய க்ஷணத்தில் செய்யாமல் சற்று முன்போ அல்லது பின்னடியோ ஹோமம் செய்வதாலும் ஏற்படும் தோஷமும் அகலும். 3 வதும் 4 வதும் செய்யக் காரணம் - ஸூர்ய உதயம் அஸ்தமநம் இக்காலங்களில் தூங்கியதால் நமக்கு ஏற்பட்ட தோஷம் நீங்கச் செய்வது. 5. 6, 7. இம்மூன்றிற்கும் காரணம் - விட்டுப்போன ஹோமங்களைச் சேர்த்து வைத்து அதனுல் நம்மை ரக்ஷிப்பதாம். இவைகளுக்குத் தந்துமதீ என்று பெயர். தந்து = நூல். நூல் எப்படிசிதறியுள்ள துண்டுகளெல்லாவற்றையும் சேர்த்து ஒன்றுக்கொன்று விடாமல் சேர்ந்திருக்கும் படியாகச் செய்கின்றதோ அதேபோல் இந்த ஹோமங்களும் இது வரை விட்டுப்போன ஔபாஸந ஹோமங்கள் எல்லாவற்றையும் சேர்த்து விடுகிறது. இது வரை செய்யாதிருந்த தோஷமும் நிவ்ருத்தியாகும். இதன்பின் 8+11 ஹோமங்கள் செய்வதால் அநேக விதமான தோஷங்கள் அகன்றுவிடுகின்றன.

இதற்குமேல் எல்லோருக்கும் பொதுவானது. பல காலம் ஔபாஸநம் இரவு பகலில் செய்யாததால் ஏற்பட்ட தோஷம் போவதற்காக ஸர்வப்ராயசித்தம் செய்ய வேண்டியது. சிலர் இங்கு அநேக தர்ஶ பூர்ண மாஸ ஸ்தாலீ பாகம் பண்ணுத தோஷ நிவ்ருத்திக்காக மற்ஞெரு ஸர்வ ப்ராயசித்தம் செய்கின்றனர். ஸ்தாலீபாகம் இப்பொழுதே செய்வதாயிருந்தால் தான் அந்த ஹோமம் இங்கு செய்யப்படவேண்டும். வேறு தினம் ஸ்தாலீபாகம் செய்யும் பக்ஷத்தில் ஸ்தாலீபாகம் செய்யுமுன் அந்த

---

தினத்தில் இந்த ஹோமத்தைச் செய்துவிட்டுப் பிறகு ஸ்தாலீபாக ஸங்கல்பம் ஆரம்பிக்கவேண்டியது. இது தான் ந்யாயமானது. (வழகத்தை விடாமல் செய்ய விரும்புகிறவர்களுக்கும் ஓர் ஸமாதானமுண்டு. அதாவது "அந்யத²ா க்ருதமக்ருதம்" வேறு வகையாகச் செய்தது செய்யாதது போலாகும். என்ற ந்யாயத்தை அநுஸரித்து அநவஶ்யமானாலும் இதைச் செய்வதால் யாதொரு விதமான தோஷமும் வந்துவிடாது.)

இதற்கு மேல் அவிக்ஞாத ப்ராயஶ்சித்தம் முதலியன பரிஷேசனம் வரை செய்யவேண்டியது.

இத்தனை நாட்களாக ஸாயம் ப்ராதர் ஹோமங்கள் செய்யாத தோஷம் நீங்க ஹோம த்ரவிய தானம் செய்ய வேண்டும். அதாவது 6 ப்ரஸ்தம் ஹோம த்ரவியமும் 3 ப்ரஸ்தம் நெய்யும் ஔபாஸநாக்நி நஷ்டமான தோஷம் நீங்க யக்ஞேஶ்வர ஸ்வரூபர்களான ப்ராம்மணருக்குத் தானம் செய்ய வேண்டும். இத்துடன் மூன்று க்ருச்ரமும் செய்ய வேண்டும். க்ருச்²ரப்ரதிநிதியாக ஹிரண்யம் கடைசி பக்ஷமாக அனுஷ்டானத்தில் வந்துவிட்டது. அதையும் செய்ய வேண்டியது.

இங்கு நியமாத்யயனம் செய்து அர்த்த க்ஞானமுள்ளவர்கள் சில அஸௌகர்யத்தால் ஔபாஸநம் பண்ணமுடியாமல் விட்டு விட்டு சில முக்ய ஸந்தர்ப்பங்களில் அக்னி ஸந்தானம் செய்யும் போது க்ருச்²ராசரணம் சொன்னதில் பாதி செய்தால் போதுமாம.

இதற்கு மேல் பத்நீ ஸமேதனாக ஸங்கல்பித்துக் கொண்டு ப்ராத: கால ஔபாஸநம் இரண்டு ஹோமங்கள் மாத்ரம் செய்ய வேண்டும். ஆபஸ்தம்ப ஸூத்ரம் தவிர மற்ற ஸூத்ரத்தைச் சார்ந்தவர்க்குத் தான் நான்கு ஹோமங்கள் சொல்லியிருக்கின்றது. ஶௌநக வாக்யம் நான்கு ஹோமம் செய்யும்படி இருக்கிறது. ஆபஸ்தம்பர்களுக்கு यदा सन्धीयते वह्निः प्रायश्चित्त पुरः सरम् । तत्काल विहितं कुर्यात् आहुतिद्वयं तथा ॥ எப்பொழுதும் ப்ராயசித்தத்துடன் அக்னி ஸந்தாநம் செய்யப்படுகிறதோ அப்போது அந்த காலத்திற்கு விதிக்கப்பட்ட இரண்டு ஆஹுதிகளைச் செய்ய வேண்டுமென்ற ஸ்மிருதி வாக்ய

---

ஸ்த்ரீ ப்ரஷ்டையாகத்தான் வருவாள்

படி இரண்டு ஹோமங்கள் மாத்ரம் தான் செய்ய வேண்டும். ஸூர்யனுக்கு ஒன்றும் ஸ்விஷ்ட க்ருத்திற்கு மற்றொன்றும்.

ஔபாஸகம் இரண்டு வேளைகளிலும் ஜீவித்திருக்கும் வரை செய்ய வேண்டியது. ஸங்கல்பம் செய்துக் கொண்டு உல்லேகனம் முன்சொன்ன ப்ரகாரம் செய்து அக்னி ப்ரதிஷ்டை செய்து அக்னியை ஸமித்தினால் வ்ருத்தி செய்து चत्वारि श्रृंगा என்னும் இரு மந்திரங்களால் அக்னிபகவானை ப்ரார்த்திக்க வேண்டியது. 1 வது மந்திர தாத்பர்யம் அக்னிபகவான் இரு தலைகளும் அவற்றில் நான்கு கொம்புகளும் ஏழு கைகளும் மூன்று பாதங்களும் உள்ளவர். நம்மால் அனுஷ்டிக்கப்படும் கர்மாக்களுக்குத் தக்கபலனை வர்ஷிப்பவர். மூன்று வேதங்களுடன் ஸம்பந்தப்பட்டவர். கர்ஜிப்பவர். தேவதைகளுக்குள் ப்ரதானமாய் மஹாதேவனாய் உள்ளவர். மனிதர்களாகிய நம்மிடம் புகுந்தார். [ஆ 10. அனு 10] 2 வது மந்த்ர தாத்பர்யம்: இந்த மிக ப்ரகாசம் பொருந்திய அக்னி தேவன் பத்து திக்குகளிலும் வ்யாபித்திருக்கிறார். இவரே முதன் முதலில் உண்டானவர். உள்ளும் புறமும் எங்கும் நிறைந்தவர். இவரே ஸகலதேவ மனுஷ்ய பசு முதலியவர்களாகவும் ஜனித்திருப்பவர். ஜனிக்கப் போகிறவரும் அவரே. பஞ்ச கோசங்களுக்குள்ளிருப்பவரும் எங்கும் பார்க்கும் சக்தி பொருந்தியவருமாகவும் இருக்கிறார். (ஆர-ப்ர 10 அனு 1]

இவற்றின் தாத்பர்யம் - நாம் அக்னி கார்யம் செய்யும் போது அக்னிபகவானுடைய லக்ஷணத்தை அறிந்து அப்படிப்பட்ட அக்னி பகவான் நம் ஶரீரத்திலேயே புகுந்திருப்பதாகப் பாவித்துக் கொண்டு கார்யத்தைச் செய்யவேண்டியது. இதையே ஸோமயாகம் முதலிய ஶ்ரௌத கர்மாக்களில் தீக்ஷை என்பர். இந்த தீக்ஷை ஆனவருக்கு உண்டான நியமங்களைப் போல் இங்கும் நாம் ஆரம்பித்த கார்யம் முடியும் வரையிலும் நமக்கு யாதொரு விதமான அஶுசியும் வராது என்று பெரியோர் ஸம்ப்ரதாயம். (அதாவது யக்ஞத்திற்கு ஸங்கல்பம் செய்து கொண்ட பிறகு பிரஸவித்த தீட்டோ சாவு தீட்டோ வந்தாலும் யக்ஞம் முடியும் வரை தீட்டில்லை.)

---

பணம் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் வரும்

## சாந்தோக்ய உபநிஷத்.



மநதை பிரும்மம் என்று உபாஸிக்க வேண்டும். இது அத்யாத்ம உபாஸனை. ஆகாசத்தை பிரும்மம் என உபாஸிப்பது அதிதைவதமெனப்படும். மநதை பிரும்மமாக உபாஸிக்கும் பொழுது மநதை வாக் பிராணன் சக்ஷுஸ் கர்ணம் என்ற நான்கு பாதங்களுடன் கூடியதாக கருதவேண்டும். ஆகாசத்தை பிரும்மமாக உபாஸிக்கும் பொழுது அக்நி வாயு ஆதித்யன் திக்கு இவைகள் அதன் நான்கு பாதங்கள் எனக் கருதவேண்டும். வாக்கானது அக்நியின் ஜோதிஸ்ஸால் பிரகாசிக்கிறது இப்படி அறிந்து உபாஸிப்பவன் கீர்த்தி பிரும்ம வர்ச்சஸ் உள்ளவனாக இருப்பான்.

பிராணன் பிரும்மத்தின் இரண்டாம் பாதம். அது வாயுவின் ஜோதிஸ்ஸால் பிரகாசிக்கிறது என்று உபாஸிப்பவரும் அறிபவனுங் கூட முன்போல் கீர்த்தி யசஸ் பிரும்ம வர்ச்சஸ் உள்ளவனாக ஆவான்.

அதேபோல் ஆதித்யனது ஜோதிஸ்ஸால் பிரகாசிக்கும் சக்ஷுஸ் என்ற பாதத்தை உபாஸிப்பது திக்குகளின் ஜோதிஸ்ஸால் பிரகாசிக்கும் கர்ணம் எனும் பாதத்தையும் உபாஸிப்பவரும் அறிபவரும் கீர்த்தி பிரும்ம வர்ச்சஸ் முதலியவைகளைப் பெறுவர்.

ஆதித்யனே பிரும்மம் எனக் கூறப்பட்டது. முதலில் உலகம் பிரகாசமில்லாமலிருந்தது. அது அஸத் எனப் பட்டது. பிறகு ஸத்தாக ஆனது. அச்சமயம் அது ஒரு முட்டைபோல் ஓராண்டு இருந்தது. பிறகு அது மேலும் கீழும் இரண்டு பிளவாகப் பிரிந்தது. மேலே உள்ளது ஸ்வர்ணம் போலும் கீழுள்ளது வெள்ளிபோலு மிருந்தது. மேலுள்ள பாகம் ஸ்வர்க்கமாயிற்று. தாழே உள்ளது பூமியாயிற்று. ஸ்தூலமான கர்ப்பப்பையே பர்வதங்கள். ஸூக்ஷ்மமான கர்ப்பப்பை மேகமும் பனியு மாயிற்று. நாடிகள் நதிகளாயின. ஜலப்பை ஸமுத்ரமாயிற்று. அந்த அண்டத்திலிருந்து உண்டானவரே ஆதித்யனெனும் குழந்தையாம். குழந்தை பிறந்தவுடன் அழுவதல்லவா? அது பஞ்ச பூதங்களால் உண்டான சப்தங்களாம். ஆதித்யனை அனுஸரித்து பஞ்ச பூதங்களும் காமனைகளும்

---

**நமது ஆயுஸ் நமக்கிருக்கும். தநம் நமது குடும்ப சண்டை**

உண்டாயின. ஆதலால் இன்றைக்கும் ஸூர்ய உதயம் ஆனபோது எல்லோருக்கும் இதைச் செய்வோமா? இதை அணிந்துக் கொள்வோமா என்ற ஆசைகள் உண்டாகின்றன.

*மூன்ருமத்தியாயம் முற்றிற்று.*

---

## நான்காம் அத்தியாயம்.

வாயுவை பிரும்மம் என்று உபாஸனை செய் என்று கூறுவதற்காக ஒரு கதையைக் கூறுகிறது உபநிஷத்.

ஜாநஸ்ருதி என்ருேர் அரசனிருந்தார். அவரைப் பௌத்ராயணி என்றும் கூறுவார்கள். அவர் கர்மாவில் மிகுந்த ஸ்ரத்தை யுள்ளவர். ஸதா எதேஷ்டமாக தாநம் செய்பவர். எல்லோருக்கும் அன்னமளிக்க ஆங்காங்கு பல சத்ரங்களை அமைத்தார்.

இவரது அன்னதாநத்தைக்கண்டு ஸந்தோஷமடைந்த தேவர்கள் ஹம்ஸ உருவம் தாங்கி அரசனருகே சென்ருர்கள். அது கோடைகாலமானதால் அரசன் மாடிமீது அமர்ந்திருந்தான். ஹம்ஸங்களில் ஒன்று பல்லாக்ஷன் என்ற ஹம்ஸத்தை நோக்கிக் கூறிற்று. ஓ பல்லாக்ஷ! ஜாநஸ்ருதி பகல் போல் பிரகாசிக்கிருர். ஜோதிர் மயமாக இருக்கிருர். அவரது சக்தியும் புண்யமும் ஸ்வர்க்கம் வரை வியாபித்திருக்கிறது. ஆதலால் அவரருகே செல்லாதே. நீ போனல் எரிந்து விடுவாய் என்றது.

பல்லாக்ஷன் கூறிற்று. இந்த அரசன் நிக்ருஷ்டமானவர் தானே! ஸயுக்வான் என்ற ரைக்வரைப் போல் இவரைப் பெருமையாகப் பேசுகிருயே!

மற்ற ஹம்ஸம் பதில் கூறிற்று. சொக்கட்டான் காயில் நாலு புள்ளியுள்ள பக்கம் மேலே விழுந்தால் ஜயம். அதில் மூன்று இரண்டு ஒன்று என்ற புள்ளியுள்ளவை உள் அடங்கியதாகும். அதே போல் ரைக்வர் செய்யும் புண்யத்தில் ஜாநஸ்ருதி முதலியவர்கள் செய்த புண்யம் உள் அடங்கியதாகும். அதாவது ரைக்வரது புண்யம் எல்லோரது புண்யங்களையும் விட சிலாக்யமானது.

---

# அஷ்டாவக்ர கீதை.



எங்கும் எப்போதும் பிரும்மத்தையே காணும் க்ஞாநி புருஷனே ஸ்த்ரீயோ ஸம்பத்தோ ஆபத்தோ சுகமோ துக்கமோ எதிலும் நிரளுகை இருப்பான். ஒருவரை ஹிம்ஸிப்பதோ மற்றொருவரிடம் கருணை காட்டுவதோ கொழுத்தவனாக இருத்தலோ ஏழ்மை பாராட்டுவதோ ஒன்றைக் கண்டு ஆச்சர்யபடுதலோ ஒன்றைக் கண்டு கலங்குவதோ ஸம்ஸார ஸாகரத்தைக் கடந்தவனுக்குக் கிடையாது.

முக்தன் ஒரு விஷயத்தையும் வெறுக்கமாட்டான். விரும்பவும் மாட்டான். எதிலும் பற்று கொள்ளவும் மாட்டான். எது வந்தாலும் ஸமமாக அநுபவிப்பான்.

சூன்யமான மனமுடையவன் கைவல்யம் பெற்றவனுவன். அவனுக்கு சாந்தியோ, குழப்பமோ ஹிதமோ அஹிதமோ ஒன்றும் கிடையாது. மநம் அழிந்து விட்டதால் மநதின் கார்யமான ஒரு எண்ணமுமில்லை.

அஹங்கார மமகாரங்களை விட்டவன் ப்ரும்மத்தைத் தவிர வேறு ஒரு வஸ்து இல்லை என்று எண்ணுபவன், ஆசையெல்லாம் அடக்கினவன் ஒரு கார்யத்தைச் செய்தாலும் கூட செய்யாதவனுவன். அந்த பலன் அவனைச் சாராது. மனமே ஒடுங்கினவனுக்கு மனதில் ப்ரகாசம், மோஹம், ஸ்வப்னம், ஜாட்யம் முதலியன தோன்ரு. அவனது நிலை வர்ணிக்க முடியாத சிறந்த நிலையாகும்.

**18-ம் அத்தியாயம்:** நல்லறிவு வந்தபின் இதுவரை இருந்த ப்ரமம் ஸ்வப்னம் போல் ஆகி ஸுகத்திற்கும் சாந்திக்கும் இருப்பிடமான தேஜோமயமானவனுக்கு நமஸ்காரம்.

நிறைய பொருள்களைச் சேர்த்து ஸகல போகங்களையும் அநுபவித்தாலும் அவைகளை யெல்லாம் தியாகம் செய்தால்தான் உண்மையான சுகத்தைப் பெற்றவன் ஆவான். அவை இன்ப துன்பம் கலந்தவை. நச்வரமானவை.

கர்மாக்களால் ஏற்படும் துக்கமே ஸூர்ய ஜ்வாலை போல் மனதை எரிக்கின்றது. அப்பொழுது சாந்தி என்ற அம்ருத தாரையைத் தவிர வேறு எதனுல் ஸுகம் உண்டாகும்? அஸத்கர்மாவை விடு. சாந்தி பெறு.

---

**செய்த தானம் மானாவமாக மிவைகளைச் சொல்லாதே.**

ஸம்ஸாரம் என்பது கல்பனையினுல் உண்டானதே தவிர உண்மையில் இல்லை. இருப்பதாகவும் இல்லாத தாகவும் தோற்றி வைக்கின்ற மாயா ப்ரக்ருதி, ஞானம் வரும்வரை அழிவதில்லை.

விகல்பமில்லாததும் ஆயாஸமில்லாததும் மாறுதல் இல்லாததும் பற்றுதல் இல்லாததுமான ஆத்ம பதம் தூரத்திலுமில்லை, அருகிலுமில்லை (நித்யமாக எங்கும் உள்ளது)

மோஹம் அகன்ருல் போதும், ஸ்வரூபம் தானே தோன்றும். அதனுல் கண்ணைத் திறந்து பார்ப்பதுபோல் சோகத்தை அகற்றிப் பிரகாசிக்கிருன்.

உலகெலாம், கேவலம் கல்பனையே. ஆத்மா எப்பொழுது முக்தனுகவே இருக்கின்ருன் என்று நன்கு உணர்ந்த தீரன் குழந்தைகளைப் போல் வேதாந்தபாட அப்யாஸம் செய்யவேண்டிய அவசியமில்லை.

நமது ஆத்மாவே ப்ரும்மம் என்று நன்கு, நிச்சய க்ஞானம் வந்தவனுக்கு மற்ற பொருள்கள் உள்ளதும் இல்லாததும் கேவலம் கல்பனை மாத்ரமாகத் தோன்றும். ஆசையற்றவன் வேறு எதை அறிய ஆவல் கொள்வான்? எதைப் பேசுவான் ? எதைத்தான் செய்வான் ?

எல்லாம் ஆத்மஸ்வரூபமே என்று உணர்ந்து சும்மா இருக்கும் துறவிக்கு இவன், அவன், நான், இவன் இல்லை இவனிருக்கிருன் என்ற எண்ணங்கள் நசித்துப்போகும்.

சாந்தியடைந்த துறவிக்கு, மனதின் அலைச்சலோ ஏகாக்ரமாய் இருத்தலோ, நல்லறிவோ, அறிவின்மையோ, ஸுகமோ, துக்கமோ ஒன்றுமே கிடையாது.

நிர்விகல்பக ஸமாதியிலுள்ள யோகிக்கு, ஸ்வராஜ்யமும், பிச்சை எடுத்தலும், லாபமும், நஷ்டமும், நாடும், காடும் ஸமமாகவே தோற்றும்.

ஸுகதுக்காதி இரட்டைகளை விட்ட யோகிக்கு தர்மமோ, அர்த்தமோ, காமமோ, விவேகமோ இதைச் செய்தேன், இதைச் செய்யவில்லை என்ற எண்ணமோ கிடையாது.

ஜீவன் முக்தனுன யோகிக்குச் செய்யவேண்டியது ஒன்றும் கிடையாது. அவன் மனதை ஸந்தோஷப்படுத்தக்கூடியதும் ஒன்றுமில்லை.

---

**பசு, பத்நீ, பிள்ளை, வீடு இவை ஜன்மாந்த்ர கடனுகும்.**

# பால பாரதம்.

பாலர் பகுதி.



கே: இறந்த, திருதராஷ்ட்ரன் புத்ரர்களுக்கெல்லாம் தஹனதி ஸம்ஸ்காரங்கள் எப்படி?

ப: தஹனத்திற்குமுன்னே காந்தாரிக்கு வ்யாஸர் திவ்ய சக்ஷுஸ்ஸைத் தந்தார். அவள் 100 மருமகளுடனும் குந்தி, திரௌபதி முதலியவர்களுடன் கூடி யுத்த ரங்கத்திற்கு வந்து பிணங்களை கட்டிக்கொண்டு அழுதாள் இதுவரை புருஷர் கண்ணில் படாத ராஜ ஸ்த்ரீகளான மருமகள்களை யார் யார் என காந்தாரி கிருஷ்ணனுக்குச் சுட்டிக் காட்டினள். மறுபடியும் துக்கத்தால், "க்ருஷ்ண! நீயும் எல்லா பந்துக்களையுமிழந்து பிறகு இறப்பாய்" என்றாள்.

கே: பகவான் இதற்காக வருந்துவரா? இறந்தவர்களுக்கு யார் தஹநாதிகளைச் செய்தது?

ப: த்ருதராஷ்ட்ரரும் தர்மரும் சொன்னபடி ஸஞ்ஜயரும் விதுரரும் எல்லோருக்கும் தஹநம் செய்தார்கள். தர்ப்பணம் செய்யும் போது குந்தி, "தர்மா! உனது அண்ணனை கர்ணனுக்கும் தர்ப்பணம் செய்" என்றாள்.

கே: இதுவரை அதை அறியாத தர்மருக்கு இது ஆச்சர்யத்தையும் துக்கத்தையும் விளைவித்திருக்கும் அல்லவா?

ப: சொல்ல வேண்டுமா? அண்ணனைக் கொன்றோமே என்ற துக்கம்! இதுவரை தாய் கூறாமல் இருந்தாளே, என்ற அடக்கமுடியாத கோபம்! இனி பெண்களிடத்தில் ரஹஸ்யம் தங்கக் கூடாதெனச் சாபமும் கொடுத்தார்.

கே: ஓஹோ! அதனால்தான் ஸ்த்ரீகளிடம் ரஹஸ்யத்தைச் சொல்லக்கூடாதெனச் சிலர் கூறுகிறார்கள். மறுபடி என்ன நடந்தது?

ப: கங்காதீரத்தில் தர்ப்பணம் செய்யும் போது. நாரதர் வந்து கர்ணனது ஸகல விருத்தாந்தங்களையும்

---

விளக்கமாகக் கூறினர். தர்மர் பரமதுக்கமடைந்து ராஜ்யத்தை விட்டுக் காட்டிற்குச் செல்வேன் என்ருர்.

கே: துக்கம் ஒரு புறமிருக்க, 12 வருஷம் வனவாஸம் செய்த வாஸனை அவரை அரண்யத்திற்கிழுத்தது போலிருக்கிறது! எப்படி ஸமாதானமடைந்தார்?

ப: தம்பிமார்கள், மனைவி, தாய், க்ருஷ்ணன், வ்யாஸர், நாரதர் முதலிய அனைவரும் பற்பல தர்மநியாயங்களைக்கூறி ஒருவாறு தர்மரை ஸமாதானப் படுத்தினர்.

கே: அப்பொழுதாவது அவர் மனம் ஶாந்தியடைந்ததா?

ப: ஶாந்தி அடைய முயற்சித்ததாலும் ஶாந்தியடைந்ததாலுமே இந்த பன்னிரண்டாவது பர்வா **சாந்தி பர்வா** என அழைக்கப்படுகிறது. பட்டாபிஷேகத்திற்கு இசைந்தார். அங்கொரு ஆபத்து திடீரென வந்தது.

கே: அதென்ன ஆபத்து? பகவான் தான் இருக்கிருரே எத்தனை வந்தாலென்ன?

ப: ஒரு பிராம்மணன் ஸபையிலெழுந்து எல்லா பிராம்மணர்களுக்கும் யான் பிரதிநிதி, பந்துக்களைக்கொன்ற நீ ராஜ்ய அபிஷேகத்திற்கு அர்ஹனல்ல என்கிருர்கள் பிராம்மணர்கள் என்ருர்.

கே: அடடா! ஏற்கெனவே தன்னை பாபியெனக் கருதி வனம் செல்ல முயற்சித்தவருக்கு இது ஒரு பக்கபலமாய் விட்டதே? சொல்லு, சொல்லு, மேலே என்ன?

ப: அநாவச்யமாக இந்த பாபத்திற்குத் தங்களையும் உடந்தையாக்கிய 'சார்வாகன்' என்ற அந்த ராக்ஷஸனை பிராம்மணர்கள் சாம்பலாக்கினர்கள்.

கே: யாரவன்? ஏன் இப்படிக் கூறினன்?

ப: துர்யோதனனுடைய நண்பன் அவன். நண்பன் இறந்ததைக் கேட்டு இறந்த அவனுக்கு உபகாரம் செய்வதாக நினைத்துத் தானும் அழிந்தான்.

கே: தர்மராஜ்ய பட்டாபிஷேகம் ஒருவாறு முடிந்ததா? அத்துடன் பாரதமும் முடிந்ததா?

---

**பிறரைத் தூஷிப்பவன், நித்ய கர்மாக்களை விட்டவன்**

ப : பட்டாபிஷேகம் முடிந்தது. பாரதம் முடியவில்லை. 12 வது பர்வா ஆரம்பத்தில் பட்டாபிஷேகம். இதில் பீஷ்மர் தர்மாதிகளுக்குக் கூறும் தர்மம் மேலே 6 பர்வாக்கள் முடிந்தால்தான் பாரதம் முடிந்ததாகும்.

கே : பலர் பட்டாபிஷேகத்துடன் தான் கதையை முடிக்கிறார்களே ? அது ஏன் ?

ப : ஸ்ரீ ராமாயணத்திலும் அப்படித்தான், ஸ்ரீ பாகவதத்திலும் ருக்மிணி கல்யாணத்துடன் சிலர் முடிப்பர். முடிவில் ராமர், கிருஷ்ணர், பாண்டவர் அனைவரும் இவ்வுலகை விட்டுச் செல்வதால் அமங்களம் என நினைத்து நிறுத்துகின்றனர்.

கே : ஆனால் அது நியாயமில்லையோ ?

ப : கேட்கிற நாமும் கூறும் சாஸ்த்ரிகளும் கூட சாச்வதமில்லையே ! வைகுண்டம் சென்றார் என முடிப்பதும் தப்பில்லை. வேண்டுமானால் மறுபடியும் அவதார கட்டம் வரை அல்லது அவதார கதையையாவது கூறி நிறுத்த வேண்டும்.

கே : பாரதத்தில் மேலே என்ன இருக்கின்றது ?

ப : வேதவ்யாஸர் கூறும் ஸகல தர்மங்களும் ஶாந்தி பர்வா, ஆநுசாஸநிக பர்வா, அச்வமேத பர்வா முதலியவைகளில் எண்ணிறந்த கதைகளுடன் கூறப்படுகின்றன.

கே : ஆனால் நாம் அத்துடன் நிறுத்தாமல் மேலே கதையைக் கேட்போம். பட்டாபிஷேகத்திற்குப் பின் என்ன நடந்தது ?

ப : கிருஷ்ணன் சொற்படி ஶரதல்பத்தில் படுத்திருந்த பீஷ்மரிடம் தர்மங்களைக் கேட்கக் கிருஷ்ணன் உள்பட அனைவரும் சென்றார்கள். தர்மர் கேள்வி கேட்க வேண்டுமென்றும், பீஷ்மர் கூறுவதை அனைவரும் ச்ரவணம் செய்யவேண்டுமென்றும் பகவான்ஒரு வ்யவஸ்தையை ஏற்படுத்தினர்.

கே : பீஷ்மர் அடிபட்டிருப்பதாலும் ஆகாராதிகள் இல்லாதிருந்ததாலும் எப்படி தர்மத்தை கூறுவார் ?

---

**லோபி, நீண்டநாள் கோபமுள்ளவன் ஆகிய ஐவரும்**

ப : பகவான் கூடவே இருக்கின்றார் என்பதை மறந்து விட்டாயா? அவர் பீஷ்மருக்கு வேண்டிய பலத்தை தந்து ஆசிர்வதித்தார். அதனால் பலநாட்கள் தர்மத்தை கூறிவந்தார் சிரமமின்றி.

கே : அப்பொழுது முதலில் தர்மர் என்ன கேள்வி கேட்டார்?

ப : பீஷ்மரது குருவும், த்ரேதாயுகம் முதல் இருப்பவருமான பரசுராமருடைய சரித்திரத்தைக் கூற வேண்டுமென வேண்ட அதை விஸ்தாரமாகக் கூறினார் பீஷ்மர். அன்று மாலை வேளையில் அனைவரும் அவரை வணங்கி உத்திரவு பெற்று அஸ்தினபுரம் வந்து சேர்ந்தனர்.

கே : மறுநாள் என்ன நடந்தது?

ப : நித்யகர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு பீஷ்மரிடம் சென்று வணங்கி நான்கு வர்ணம், நான்கு ஆஸ்ரமம் முதலியவைகளுடைய உத்பத்தி, அவைகளுடைய கடமை முதலியவைகளை விஸ்தாரமாகக் கூறும்படிக் கேட்க அவரும் விரிவாக வர்ணித்தார்.

கே : ராஜ தர்மத்தில் கூறப்பட்டவைகள் எவை எவை?

ப : பட்டணத்தை அமைக்கும் வகை, மந்திரி, புரோஹிதர் ஸேனாபதி, நால்வகை ஸேனைகள், யுத்த லக்ஷணம் அர்த்தசாஸ்த்ரம் முதலியவைகள் கூறப் பட்டன.

கே : குடிகளிடம் வரி வாங்குவது பற்றி ப்ரஸ்தாபம் உண்டா?

ப : அரசன் குடிகளது குடும்பம் கஷ்டப்படாதபடி அவர்களை ரக்ஷித்து அவர்கள் வருமானத்தில் எச் செலவும்போக எட்டில் ஒருபங்கு வரி வாங்கவேண்டுமென உதாஹரணத்துடன் கூறினார். அரசன் புஷ்பக்காரன் போல் செடிக்கு ஜலம்விட்டுச் செடி அழியாமல் அதன் மொக்கைமாத்திரம் கிள்ளுவது போல் வரி வாங்கவேண்டும். கரி சுடுபவன் மரத்தை வேருடன் வெட்டிச் சுடுவதுபோல் வரி வாங்காதே என அருமையாகக் கூறுகிறார். அரசனும் மற்றோரும் சோம்பலாக இருக்கக்கூடாதென ஓர் அருமையான கதை கூறுகிறார் கேள்.

---

கர்ம சண்டாளர். இவர்களைவிட ஜாதி சண்டாளர் மேல்.

# உபமன்யு பக்த விலாஸம்.

## திருஞானசம்பந்தர் (ஆடிமீ தொடர்ச்சி)

கிழக்கேயுள்ள திருவேட்டகத்தில் தங்கினபோது, அதை அறிந்த தில்லை அந்தணர் அவரை நேரில் சென்றழைக்க தில்லைக்குச் சென்று பாடினார். இங்ஙனம் பற்பல க்ஷேத்ரங்களிற் சென்று பாடினார்.

இதுவரை தந்தை தோளில் ஏறிச்சென்ற ஸம்பந்தர் அதை விட்டுக் காலால் நடக்க ஆரம்பித்தார். பெற்றோரும் மற்றோரும் இதைக் கண்டு வருந்தினர். திருநெல்வாயிலுள்ள அடியார்களுக்கு இறைவன் கனவில் தோன்றி, "நம் ஆணையின்படி முத்துப்பல்லக்கு முத்துக்குடை ஊத முத்துச்சின்னங்களும் அளித்து அழைத்து வாருங்கள் ஸம்பந்தனை" என்றார். அங்ஙனமே அவரை வரவேற்றனர். பல்லக்கிலேறி பற்பலக்ஷேத்ரம் சென்றார். சண்டேசர் தோன்றிய திருச் செய்நல்லூரில் காலால் நடந்து தர்சித்தார். சீர்காழிக்கு வந்து தக்க காலத்திலே உபநயனம் செய்து கொண்டு பஞ்சாக்ஷரியையும் பெற்றார்.

குழந்தை பக்தரைக் காண வாகீசர் சீர்காழி வந்தார். ஸம்மந்தர் அடியார் கூட்டத்துடன் அவரை வரவேற்க ஹரா! ஹரா! மகாதேவ! எனும் சப்தம் வானளாவிற்று. எங்கும் ஒரே விபூதி ருத்ராக்ஷமணிந்த சிவபக்த கூட்டம். சிலநாளங்கு தங்கி அவர் விருப்பப்படி தோணியப்பரைப் பாடி வாகீசர் விடை பெற்றுச் சென்றார். தன்னுடன் வருவது தந்தைக்குப் பலவகையிலும் சிறிது சிரமம் என்றுணர்ந்த ஸம்மந்தர் அவரை ஊரிலேயே இருக்கச்சொல்லி பலக்ஷேத்ரம் செல்ல தனக்கு விடை தரும்படி பிதாவை வேண்டினார். இத்தகைய தவப்புதல்வனை – பக்தனை – புலவனை – விட்டுப் பிரிவரோ சிவபாதர்? புதல்வனுடன் சென்றார்.

**திருப்பாச்சிவாச்சிராமம்** என்ற ஊருக்குச் செல்லும் போது அவ்வூரரசன் இவர் வரவைக் கேட்டு ஆநந்தம் அடைந்து தக்கபடி வரவேற்று ஆலயத்திற் கழைத்துச் சென்றான். ஆங்கு

---

**குழந்தைகளை 5-வயதுவரை ராஜாவைப்போல் போஷி.**

கோபுரவாசலில் ஒரு ராஜ கன்யகை அபஸ்மாரம் (காக்கா வலிப்பு) என்னும் நோய்வாய்ப்பட்டு எந்த சிகித்ஸைக்கும் அது கட்டுப் படாமல் போகவே இறைவனே சரணமென்று அங்கு படுத்திருப்பதைப் பார்த்து இது யார்? என வினவினர். தங்களை வரவேற்று உபசரிக்கும் மன்னன் மகளே இவள் என்றனர். இந்த கஷ்டத்திலும் தன்னை ஸேவிக்கும் மன்னனைக் கொண்டரடினர். இறைவனை நாடிப் பாடினர். நோய் அகல, மன்னனும் மகளும் பக்தரின் மன்னனை ஸம்மந்தரைக் கொண்டாடி முக்கரணங்களாலும் பூஜித்து உடல் பொருள் ஆவிகளை அவருக்கு அர்ப்பணம் செய்தனர்.

திருச்செங்குன்றூர் என்ற திவ்ய க்ஷேத்திரத்திற்குச் சென்ற போது ஆங்குள்ளோரும் ஸம்மந்தருடன் வந்த அடியார்களும் பொறுக்கமுடியாத குளிரால் துன்புற்றனர். கருணை மூர்த்தியான ஸம்மந்தர் சிலபாட்டுகளால் பகவானை வேண்ட, அந்த க்ஷணமே அகன்றது நோய். சிவபாதர் யாகம் செய்ய விருப்பங் கொண்டு பொருளுக்கென் செய்வதெனகலங்கினர். ஸம்மந்தர் வேறெங்கு செல்வர்? பகவானையே பாட ஒரு சிவகணம் அக்ஷய்யமான ஸ்வர்ண பாத்ரத்தைத் தந்தது. சிவபாதர் மட்டுமல்லாமல் வேள்வியில் விருப்பு கொண்ட அனைவரும் அப்பொருளால் மெய்ப் பொருளான பகவானை ஆராதித்தனர்.

ஒருநாள் யாழ்பாணர் தன் உறவினரிடம் ஸம்மந்தர் பாட்டுகளைத் தனது வீணையிலடக்கிப் பாடுவதாகக் கூறி சிறிது கர்வங்கொண்டார். இதை அறிந்த ஸம்மந்தர் ஒரு பாட்டைப் பாடி அதை வீணையில் பாடச் சொன்னர். பலமுறை முயற்சித்தும் பாட முடியவில்லை. தனது வீணை தான் பாடா வண்ணம் செய்ததென சினங்கொண்டு அதை உடைக்கமுயன்றார் பாணர். சிவன் பெருமை வீணையில் அடங்குமா? ஸாஹஸம் செய்யாதே! என்றார் ஸம்மந்தர். இதைக் கேட்டவுடன் தன் குற்றத்தை யுணர்ந்து பகவானை வேண்டினர் பாணர். அதே பாட்டை அதே வீணை மறுபடி அழகாகப் பாடிற்று.

திருமருகல் ஸ்தலத்திலே ஒரு வைஶ்ய கன்யகை

---

பின் 10-வயதுவரை தாஸனைப்போல் அடக்கி நடத்து.

தனது அத்தை மகனை மணக்கக் கருதி வரும்போது அவனை அரவந் தீண்டிற்று. பெற்றோரையும் விட்டு இவரைப் புருஷனைக எண்ணி வந்தேனே! இனி என் கதி யாதென புலம்பினாளவள். இதைக் கேட்ட ஸம்பந்தர் அவளது குறையை நன்கு விசாரித்தார். எனது தந்தை எனக்குமுன் பிறந்தஸஹோதரிகளை இவருக்குத் தருவதாகக் கூறி இவரை விடச் செல்வ முள்ளவர்களுக்கே அனைவரையும்தந்தார். இவர் என் தந்தை சொல்லை நம்பி வேறுமணம் செய்துகொள்ளாமல் ஏங்கிநின்றார். இவர் கவலையை அகற்ற ஏழையாயினும் உறவினர், நம்பி இவர் என்ற காரணத்தால் பெற்றோரிடம் கூறாமலும் அவர்கள் ஸம்மதம் பெறாமலும் இவரை மணக்கப் புறப்பட்டேன். ஸர்ப்பம் இவர் உயிரைக் கொண்டு சென்றது. இனி யான் என்ன செய்வேன்? எங்கு செல்வேன்? என அலறினாள். ஸம்மந்தர் பகவானைப் பாடி அவரை எழுப்பி இருவர்க்கும் மணம் செய்வித்தார்.

சிறுத்தொண்டரை ஸந்தித்து மகிழ்ந்தார். திருப்புகலூர் சென்றார். அங்கு முருகனார் எனும் பக்தர் அடியார்களுக்காக ஒரு மடம் அமைத்து அடியார் ஸேவை செய்து வந்தார். அங்கு சென்று அவரைக் கண்டு மகிழ்ந்தார். திருவாரூரை ஸேவித்துவிட்டு வாகீசர் திருப்புகலூர் வர ஸம்மந்தர் இரண்டாம் முறையாக அவரை தரிசித்து அவர் மூலமாகத் திருவாரூர் க்ஷேத்ர மகிமையைக்கேட்டு அங்குசென்று தர்சித்தார்.

வாகீசரும் ஸம்மந்தரும் சேர்ந்து எண்ணிறந்த அடியார் கூட்டம் பின் பற்றப் பற்பல திவ்யஸ்தலங்களுக்குச் சென்றார்கள், திருவிழிமிழலையில் சிலகாலம் தங்கினர். ஸம்மந்தருக்குத் தோணியப்பரைத் தர்சிக்க அவா தோன்றிற்று. பகவான் அந்தாலயத்திலேயே தோணியப்பராகத் தோன்றி தர்சநம் தந்தார். பலருமிதைக்கேட்டுவியந்தனர்.

ஒரு ஸமயம் மழை இல்லாததால் பொருள் விலை ஏறிச்சாப்பாட்டிற்குக்கஷ்ட மேற்பட்டது. இரு பக்தர்களும் பாட இறைவன் இருவர்க்கும் இரு பொற்காசுகள் அன்றன்று மளித்தார். அதனால் அடியார் பசி யகன்றது. இருவரும் வேதாரண்யம்சென்றனர். வேதங்கள் பூஜித்துச் சென்ற

வாயற்படி திறக்கமுடியாம லிருந்ததால் வேறு வழி ஏற் பாடு செய்து பக்தர் பக வானை வணங்கி வந்தனர். இதைக் கேட்டு இருவரும் வேதாரண்யேசனைப் பாடி அன்று முதல் அக் கதவு வழக்கப்படிசாத்தவும் திறக் கவும் ஏற்பாடு செய்தனர்.

மதுரையில் சுந்தரேசன் பரம்பரையில் வந்த கூன் பாண்டியன் சைவ வழிபாட் டை விட்டு சமணருடன் சேர்ந்தான். அவன் மனைவி யும் மந்திரியும் சிவபக்தியி லீடுபட்டவர். மன்னன் மன தைத் திருப்ப க்ஞானஸம்பந் தரால் தான் முடியு மென அவரை அழைத்து வர தூதர்களை அனுப்பினார்கள். ஸம்பந்தர் வந்து ஒரு மடத் தில் தங்கினர். இதை அறி ந்த சமணர் அரசன் ஸம் மதி பெற்று அங்கு தீவைத் தனர். இதை அறிந்த ஸம் மந்தர் வருந்த இத் தி அரச னுடலில் ஜ்வரமாயிற்று. அரசன் நோயை அகற்ற சமணர் பெரும்பாடுபட்டும் பயனில்லை. மனைவியும் மந் த்ரியும் மன்னனிடம் ஸம்பந் தர் மடத்தில் வந்திருப்பதை தெரிவிக்க தக்க மரியாதை யுடன் அவரை அரச சபை க்கு வரவேற்க அவர்களிடம் பாண்டியன் சொன்னன்.

சம்பந்தர் அமைச்சருக்கும் ராணிக்கும் அபயமளித்துக் கூன்பாண்டியனைச் சைவ னுக்குவதாகக் கூறினர். மறுநாள் சமணரும், சம்பந் தரும் சபையில் வந்து தத் தம் சக்தியினல் அரசனது நோயை அகற்றவேண்டும் எனக் கூறினர். சம்பந்தர் ஒரு பாகத்திலிருந்த ஜுரத் தை அகற்றி சமணருக்குரிய பாகத்தில் செல்லும்படிச் செய்தார். அதை அகற்ற அரும்பாடு பட்டும் சமணர் களால் முடியவில்லை. ஆத லால் சமணரை விலக்கி திரு ஞானசம்பந்தரைக்கொண்டு அந்த பாகத்திலிருந்த நோ யையுமகற்றிக்கொண்டான் அரசன். சமணர் முன்பிரு ந்த செல்வாக்கினல் தங்கள் மதத்தைக் கைவிடலாகாது, மற்றோர் முறை பரீக்ஷை வைக்கவேண்டுமென்றனர். அங்ஙனமே ஏற்பாடு செய் தானரசன். இருவரும் அவ ரவர் மந்திரத்தை ஓலையில் எழுதித் தீயிலிடவேண்டும். எவர் ஏடு எரியாமல் இருக் கின்றதோ அவர் மதமே சிறந்தது என்றான். இருவ ரும் அப்படியே மந்திரங் களை எழுதி ஓலைகளைத் தீயி லிட்டனர். சமணர் ஓலை சாம்பலாகியது. சம்பந்தர் ஓலை முன்னிலும் சிறப்பாக விளங்கிற்று.

---

**ஸிம்ஹம் மூன்று மூன்றாக பிறக்கும். புலி ஐந்தைந்தாக.**

# கங்கா தத்தன்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

(ஆடிமாதத் தொடர்ச்சி.)

நற்குண நற்செய்கைகளில் சிறந்த அந்த சந்தனு என்னும் ராஜ ரிஷி தன்னை விட்டு மறைந்த கங்கையையும், அவள் தன்னிடம் ஈன்றெடுத்துச்சென்ற எட்டாவது மைந்தனையும் மறக்கமுடியாமல் வெகு காலம் கழித்திருந்தான். தன்னரசைச் செவ்வனே தரும நெறி தவறாது பரிபாலித்து பிரஜைகளுக்குப் பெருத்த சுகம் அளித்துக் காத்திருந்தான்.

முன்போல, ஒரு நாள் சந்தனு கங்கைக் கரையில் வேட்டையாடித் திரிந்திருக்கும் தருவாயில், ஓரிடத்தில் கங்கையின் ஜலமட்டம் ஏறுவதும், இறங்குவதுமாக இருப்பதைக்கண்ணுற்று, அதன் காரணம் அறியக் கரையோரமாசச் சென்றான். சிறிது தூரத்தில் பால ஸூர்யன் போன்ற ஓர் இளைஞனைக் கண்டான். இளைஞன் விற்பயிற்சி செய்துகொண்டிருந்தான். அம்பு தொடுத்து கங்கையின் வெள்ளத்திற்கு அணை போடுவதும், பிறகு மற்றொரு அம்பால் அணையை உடைத்து, ஜலத்தைப் பெருகச் செய்வதும், இவ் வீரனுக்கு விளையாட்டாக இருந்து வந்தது. சிறுவனை அரசன் அணுகியதும் சிறுவனும் மாயம்போல் மறைந்துவிட்டான்.

சந்தநு சிறிது யோசித்து, கங்கையை அந்த இடத்திலே நினைத்துத் துதித்தான். கங்காதேவியும், தனது வலது கரத்தில் இளைஞனுடன், அரசன் முன்னிலையில் தோற்றம் அளித்தாள். அவனுடைய தேவதா ஸ்வரூபமும், சிறுவனின் வளர்ச்சியும், தேஜஸ்ஸும் சந்தனுவுக்கு பழைய நிலையில் கண்டபடி சிறிதும் அடையாளம்

---

**பசு ஒன்றாகவே பிறக்கும். தர்மத்தினால் பசு அழியாது.**

தெரிந்துகொள்ள முடியவில்லை. யாரென்று மயங்கி நிற்கும் ராஜரிஷியை, கங்கை அணுகி தான் யார் என்று தெரிவித்ததுடன் "அரசே! என்னால் வளர்க்கப்பட்டு, வஸிஷ்டரிடம் கற்று, எல்லா வேத வேதாங்கங்களிலும் வில் முதலிய எல்லா அஸ்திரங்களிலும் பெரும் தேர்ச்சி பெற்றான். இவன் உம்முடைய புதல்வன் என்பது ஞாபகமிருக்கட்டும். இவன் அறியாதது ஒன்றில்லை. இவனை வெல்லக்கூடியவரும் ஒருவரும் இல்லை. ஆங்கீரஸர் என்ற ப்ருஹஸ்பதியும், சுக்ரரும், பரசுராமரும் அறிந்தவை எல்லாம் இவன் அறிவான். உம் வீட்டுக்கு இவனை அழைத்துச் செல்வீர்" என்று அன்புடன் அரசனிடம் அப்புதல்வனை அளித்தாள். அவ்விடத்திலேயே கங்காதேவியும் மறைந்துபோனாள்.

நிகரில்லாத தன் தனயனுடன் சந்தனு பெரு மகிழ்ச்சி பொங்க ஹஸ்தினாபுரம் என்ற தன் நகரம் சேர்ந்தான். "தேவவ்ரதன்" என்ற இந்த மைந்தனுக்கு இளவரசு பட்டம் அளித்து, அரசின் பொருப்பை அவனிடமளித்து தானும் அவனுடன் மகிழ்ந்திருந்தான்.

சில வருஷங்கள் சென்றன. யமுனைக் கரையில் ஒரு நாள் சந்தனு தனியாக ஒரு ஸாரதியுடன் ரதமேறி வேட்டையாடிக்கொண்டிருந்தான். அங்கு வெகுதூரம் வீசும் ஒரு பரிமள கந்தம் இவனை ஆட்கொண்டது. அந்த மணம் வந்த வழியே அரசன் சென்றான். அங்கு ஓர் மாதரசியைக் கண்டான். அவள் அங்குள்ள செம்படவர்கள் தலைவனின் மகளாக இருக்கவேண்டும் என ஊஹித்தான். ஆனால் தன் மனதை அடக்கமுடியாத அந்த ராஜரிஷி செம்படவர்கள் தலைவனை நாடி, அந்தப் பெண்ணைத் தனக்கு விவாஹம் செய்துத்தரும்படிக் கேட்டான். அவனும் "இப்பெண் ஸாமான்யப் பெண் அல்லவென்றும், தன்னால் வளர்க்கப்படுவது ஒன்றே தவிர

---

மற்றவை அதர்மத்தால் விரைவில் அழியும்.

இவளுடைய மேன்மையை தன்னாலும் வேறு எவராலும் அறியத் தரமல்ல வென்றும், இவளை விவாஹம் செய்து கொண்டால், இவளுக்குப்பிறக்கும் ஸந்ததியே அரசணை யில் வீற்றிருக்கவேண்டும். இதுவே தன் கோரிக்கை. தான் கேட்கும் வரம் என்றும் தாசராஜன் முழங்கினன். தன்னுடைய ஈடிணையில்லாத கங்கா புத்ரனுக்கு துரோஹம் இழைக்க அரசன் நெஞ்சம் அதற்கு சம்மதிக்க வில்லை. தான் கண்ட எழில் காரிகையை மறக்கவுமுடிய வில்லை. நகரம் திரும்பின சந்தனு, வெகு காலம் இந்த வேதனையை மனதில் பூட்டிவைத்து, நாளடைவில் கவலையால் வாடித் தவித்தான். தந்தையின் துன்பத்தை அறியாத தேவவ்ரதனும், அவரை அணுகி ஆறுதல் சொல்லித் தேற்ற நினைத்தான். தன்னைக் கண்டபோ தெல்லாம் பெருமூச்சுவிடும் தன் தந்தையின் துயரத் திற்குக் காரணம் என்னவென்று வினவினன், பிள்ளை யிடம் சொல்லக்கூடியதல்லவே இந்த துயரம். தன் துயரத்திற்கு முக்கிய காரணம் என்ன என்பதை அந்த ராஜரிஷி, ராஜநீதி, ராஜதர்மங்களில் சிறந்தவனன தேவவ்ரதனுக்கு ஒருவாறு விளக்கினன்.

"தேவவ்ரதா, அரசன் கவலையற்றிருக்க வேண்டு மானல், அவனுடைய ராஜ்யம், அவனுக்குப் பிறகு எந்த குறையுமின்றி (அராஜகத்திற்கு உட்படாமல் அவனைப்போல் அவன் ஸந்ததியால் பாதுகாக்கப்படவேண் டும். அரசகுலம் அழியாமல் பாதுகாக்கப்பட வேண் டும். எனக்கு இருப்பவன் நீ ஒரே புதல்வன். உனக்கு ஆபத்து ஏதேனும் நேரிடினும் இக்குலம் அழிந்துவிடும். அதற்காகப் பல புத்ரர்களை அடையும் கருத்தும் எனக் கில்லை. நீ நூறு பிள்ளைகளுக்கு மேற்பட்டவன். உனக்கு த்ரோஹம் செய்யவும் நினைக்கவில்லை. இரு கண்களில் ஒரு கண் மாத்திரம் இருந்தால் எப்பொழுதும் கவலையே. ஒரு கண் போனல் பார்வையே போய்விடுகிறது. ஒரே

புத்ரன் அழிந்தால் குலமே அழிந்ததாகும். அதனால் குலத்தையும், அரசாட்சியையும் பாதுகாக்கும் பெரும் செல்வமான உன் பொருட்டே இந்த என் கவலை" என்ற தந்தை மொழி கேட்ட தனயனும் ஸாரதிமூலம் விஷயம் அறிந்து நேராக அந்த செம்படவர் தலைவனை நோக்கி விரைந்தான். தேவவ்ரதனைக் கண்ட தாச ராஜனும், தன் நிபந்தனையை அறிவித்தான். "உம்முடைய தந்தை இவளைக் கண்டு மோஹித்தார் என்றால், அது அவருடைய குற்றமல்ல. இவளுடைய பிறப்பின் மேன்மையே அவரை அவ்வாறு செய்வித்தது. இவள் உபரிசரவஸு என்ற சக்ரவர்த்தியின் பெண். தவசிகளாலும் கொண்டாடப் பட்டவள். ஸத்தியவதி என்ற பெயர் கொண்ட இவளை மணக்க சந்தனுவே ஏற்றவன் என்றந்த உபரிசரவஸுவே ஒப்புக்கொண்டிருக்கிறார். அதனால் இவள் ஸந்ததியே அரசபதவி ஏற்கவேண்டும். வேறு யாரும் அதற்கு உரியவரல்ல. இதுவே என் பெண்ணுக்காக வைத்திருக்கும் கன்யா சுல்கம். இப்பொழுது நீர் இந்தப் பெண்ணை உம்முடைய தந்தைக்காகக் கேட்கிறீர்? அதிசயம்தான் இது! ஆனால் எனக்கு இதில் அச்சமும் ஸம்சயமும் உண்டு.

தேவவ்ரதன்: அறிந்தேன் தாசராஜா. கவலை வேண்டாம். நிச்சயம் இவளுக்குப் பிறக்கும் ஸந்ததியே அரசேற்பான். அவன் பொருட்டு எனக்குள்ள உரிமையை த்யாகம் செய்தேன். இது முற்றிலும் உண்மை.

தாசராஜன்: அய்யனே, நீர் மூத்தவர். உம்முடைய பராக்கிரமம் உலகறிந்தது. உம்மை ஜயிக்கக் கூடியவன் இந்த மூவுலகிலும் இல்லை என்று எல்லோரும் சொல்லக் கேட்டிருக்கிறேன். இன்று நீர் உம் தந்தைக்காக அரசபதவியை ஸத்யவதியின் பிள்ளையின் பொருட்டு தியாகம்செய்தாலும் உமக்குப் பின்பு பிறக்கும்

---

**குட்டைஜலம், ராத்ரியில் தயிரன்னம் ஆயுளை குறைக்கும்.**

பிள்ளைகள் உம்மைப் போலவே பலிஷ்டர்களாக இருந்து என்றும் இவள் ஸந்ததிக்கு ஹானி செய்வது ஸஹஜம் தானே. அதன் பொருட்டே சந்தேகம் கொள்கிறேன்.

**தேவவ்ரதன் :** தலைவனே இதோ இங்கு கூடியிருக்கும் ஜனங்களின் முன்னிலையில் என் உறுதிமொழியைக் கேளும். மறைந்து, கண்களுக்குப் புலப்படாத தேவர்களும், தேவரிஷிகளும் என் சொல்லை நன்ருகக் கேட்கட்டும். கண்ணுக்குத் தெரியாத சக்தியுள்ள பஞ்ச பூதங்களின் சாட்சியாகச் சொல்லுகிறேன். இந்த தேவவ்ரதன் இந்த க்ஷணம் தொட்டு நீங்காத நைஷ்டிக ப்ரும்மசர்ய வ்ரதத்தையே கடைபிடிப்பேன். அரச பதவியோ, போகமோ எதிலும் விருப்பம் கொள்ளேன். ஸ்த்ரீகளை மனதினுலும் நினைக்க மாட்டேன். புத்ர ஸந்தானத்தை அடையமுற்படேன். அபுத்ரவானுக இருந்து அதனுல் நரகம் ஸம்பவித்தாலும், என்னுடைய (ஸந்தானுஷ்டானத் ) தவநிலையால் புண்ணிய லோகங்களை அடைவேன். நான் சொல்வது ஸத்யம். என் தந்தைக்கு உன் பெண்ணைத் தயங்காமல் கொடு. " என்று கைகளை உயரத் தூக்கி கர்ஜித்து மொழிந்த கங்கா புத்ரனின் சிரஸில் புஷ்பமாரி பெய்தது." 'இவன் பீஷ்மன்' என்று அசரீரி எழுந்தது. தாசராஜனே மெய்சிலிர்த்து, நாவடைத்து நின்ருன். மறுமொழி பேசாது தன் பெண்ணை பீஷ்மனுடன் தேரில் ஏற்றி அனுப்பிவைத்தான். சந்தனுவும் ஸத்யவதியை மணந்தான்.

தனக்காகத் தன் சுகத்தை தியாகம் செய்து தன் கவலையை நீக்கிய பீஷ்மனை சந்தனு " நீ வெகுகாலம் ஜீவித்திருப்பாய். நீ விரும்பினுல் அல்லாது மிருத்யு உன்னை அணுக மாட்டான்" என்று வரம் அளித்து உவந்திருந்தான்.

---

***ஸாயங்கால வெய்யில் ஹோமப்புகை பால ஸ்த்ரீ ஸங்கம்***



# துராசை.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

[பகவானை வழிபடும் விதங்கள் எத்தனையோ! அதைக் கடைபிடித்தவர்கள் சென்ற கடின பாதைகள் எத்தனையோ! அதில் கைவல்யம் கண்டு நிறைந்தவர்கள் எத்தனையோ பேர்! நமக்கோ காலமும் தேசமும் கார்யமும் எங்கெங்கோ இழுத்துச் செல்லுகையில் எதையும் செவ்வையாகச் செய்யமுடியாத நிலையில் இம்மையில் சுகவாழ்வு கிடைப்பதே முக்கியமாகக் கொண்டிருக்கும் நமக்கு எந்த பாதை உகந்ததோ அதையும் அறியோம். அறிந்தாலும் அதைப் பின்பற்றிப் பலன் அடையும் தகுதியும் அற்றுவிட்டோம். செய்யத்துணியும் சிறிய சத்கருமங்களிலும் பெரும்பலனைக் காணாத காலத்து மனமொடிந்து பெரும் ஏமாற்றத்தால் சிதைவுண்டு, நிலை தவறி நிற்கிறோம். நமக்கு ஓர் உபதேசமான இந்தக் கீர்த்தனத்தைப் பாடி மகிழ்வோம்.]

ராகம்–சக்ரவாகம்.] பல்லவி. [தாளம்–ரூபகம்.

ஸுகுண முலே ஜெப்பு கொண்டி
ஸுந்தர ரகு ராமா — (ஸு)

அனுபல்லவி.

வகலெறுங்க லேகயிடு
வத்து வநுசு துராஸசே — (ஸு)

சரணம்.

ஸ்நாநாதி ஸுகர்மம் புலு
தாநாத் யயனம் புலெறுக
ஸ்ரீ நாயக க்ஷமியிஞ் சுமு
ஸ்ரீ தியாக ராஜ நுத — (ஸு)

பொருள் :—

**பல்லவி:** ஸுந்தர ரகுராமா – அழகுள்ள ரகுராமா; ஸுகுண முலே ஜெப்பு கொண்டின் – உன் உயர்ந்த குணங்களையே சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

**அனுபல்லவி:** வகலெறுங்க லேக – உன்னிடத்தில் உபாஸித்து அடையும் வழிகளை அறியாதவன் நான். (ஆனால் நீ மாத்திரம்) இடு வத்து அனுசுன் – என்னை

---

நிர்மலமான நீர் இரவில் பாலன்னம் ஆயுளை வளர்க்கும்.

நோக்கி இங்கு வருவாய் என்று: துராஸசே - தவறான (பொருந்தாத) ஆசையினால் (உன்னைப் பாடிக்கொண்டிருக்கிறேனோ?)

**சரணம்:** ஸ்னானதி கர்மம் புலு - ஸ்னானம் முதலிய கர்மாக்களுள்; தானாத்யயனம் புலு - தானம், வேதாத்யயனம் முதலிய (எனக்கு வர்ணாச்ரம தருமங்களில் விதிக்கப்பட்ட உயர்ந்த கருமங்களை); எறுகன - ஒருக்காலும் பெற்றவன் அல்லன் நான். இதனால் ஸ்வாமி நீர் கோபிக்க வேண்டாம்; ஸ்ரீ தியாகராஜ நுத - இந்த தியாகராஜனால் (எப்பொழுதும்) துதிக்கப்படுகிறவரே; ஸ்ரீ நாயகா-லக்ஷ்மிகாந்தனே; க்ஷமியிஞ்சுமு-க்ஷமிக்கவேண்டுகிறேன்.

உம்முடைய திவ்யானுக்ரஹத்திற்கு ஸாதனமாகத்தான் எல்லாக் கர்மாக்களும் உம்மாலேயே விதிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் நிறைவு இருந்தாலும், குறைவு கண்டாலும் நீரே உம்மை நினைப்பவர் பொருட்டு, தயவு காட்டி ஸம்பூர்ணமாக்கிக் கொடுப்பவர். உம்மை நினைக்கிறது ஒன்றையே விரும்பித் தெரிந்து விடாது பற்றி நின்றவர்களுக்கு, மற்ற கருமாக்கள் எது செய்யினும் செய்யா திருப்பினும் உம்மிடமே அவர்கள் கொண்ட பற்றுதல் உம்மிடம் சேர்த்துவிடும் என்பதை அறிவேன். பலகோடி வருஷங்கள் கர்மாக்களிலும், தவ நெறியிலும் நிலைபெற்றவர்களும் இடையே நேர்ந்த சிறிது தோஷங்களுக்கு உட்பட்டு அதனால் வினையின் பயனை அடைகிறார்கள். ஆனால் உம்மை அவர்களால் கண்டுகொள்வது என்பது துர்லபமாக இருக்கிறது என்பதை உம்முடைய சரித்திரங்களையும், லீலைகளையும் பாடியும் கேட்டும் அறிந்தேன். ஆனால் தவ நெறியில் முற்றுப் பெறுதவர்கள் வர்ணாச்ரம தர்மங்களில் குறைவுபட்டவர்கள் சாஸ்திர வரையறையினின்று தவறினவர்களும் உம்மையே பற்றுக்கோளாகக் கொண்டவர்கள் பாலர்களாயினும் அவர்கள் பால் நீரே விரைந்து செல்கிறீர் என்பதையும் உம்முடைய குணமாக உம்முடைய சரிதங்களில் பாடியும் கேட்டும் அறிந்தேன். ஆதலின் இது என்ன என் பேராசையா? —வாஸ்தவம் மற்றவர்கள் நினைக்க முடியாத ஆசைதான்— இதில் எனக்கு ஸுக வாழ்வோ பொருள் பற்றியோ நான் கேட்டேனா? ஸ்ரீ நாயகன் என்ற செல்வத்தின் தெய்வமான தங்களை நானாக அணுக இயலாதவன். தாங்கள்

---

நாமே தேடிய பொருள் உத்தமமானது.

என்னை அணுகி வந்து அருள் செய்வது உமக்கு அரிதல்லவே! இதுவே உம்முடைய "ஸுகுணம்." இதையே சொல்லிக்கொண்டிருக்கிறேன். வேறொன்றையும் நினைத்தவன் இல்லை. அருள் புரியும்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் தான் ஜீவித்திருந்த காலம் முழுவதிலும், வர்ணாச்ரம தர்மங்கள் சாஸ்திர நியமங்கள் தவறினவர் அல்லர். தன்னால் இயன்றவரை அனுஷ்டானங்களுடன் சிலமும் குறையாதவர். அவைகளுக்கு இடையே அனவ்ரதமும் பகவத்குண கீர்த்தனம் செய்து வந்தவர். அவரையே பகவான் அணுகி, தன் திவ்ய தரிசனம் அளித்தார் என்பதற்கு இதைவிட சாஸ்த்ர ப்ரமாணம் வேறு என்ன வேண்டும்?

---

## சிவானந்தரின் சீரிய போதனைகள்.

1 தேவைகளை மிகவும் சுருக்கிக் கொள்.
2 எப்பொருளிலும், யாரிடத்திலும் ஒரு பொழுதும் பற்றுதல் [வைக்காதே.
3 உன்னிடமுள்ளதைப் பிறருடன் பகுத்து உண்
4 இனிய சொற்களை அளவுடன் சொல்.
5 தெய்வத்தை அடையத் தீவிர ஏக்கங் கொள்.
6 நாளைக்குள்ளதை இன்றே செய்.
7 தற்புகழ்ச்சியையும், வீண் ஆடம்பரத்தையும் விடு.
8 எளிமையுடன் பணிவைக் கொள்.
9 சதா முகமலர்ச்சியுடன் இரு.
10 கவலைகளை அகற்றி நில்.
11 உனக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் சிரத்தை [கொள்ளாதே.
12 சில மணி நேரமாவது தனித்திரு.
13 புறங் கூறுதலையும், குற்றங் காணுதலையும் வெறுத்தொதுக்கு
14 செய்த குற்றங்களை ஒளியாது ஒப்புக்கொள்.
15 சதா சுறுசுறுப்புடன் இரு.
16 எல்லாப் பெயர்களிலும், உருவங்களிலும் கடவுளைக் காண்.
17 கடவுளிடமே நெருங்கிய நட்புக் கொள்.
18 அதிகாலையில் நான்கு மணிக்கெழுந்து ஆண்டவனை வழிபடு.
19 தீய தொடர்பையும், பயனிலாத சொற்களையும் புறக்கணி.
20 சாந்தமாகவும், தைரியத்துடனும் இன்னல்களை எதிர்த்து [நின்று முன்னேறு.
21 பெண்களைப் பராசக்தியென வணங்கு.

---

**தந்தை தேடித் தந்த பொருள் மத்யமமாகும்.**

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி.

7. सप्रेम भीति कमलाकरपल्लवाभ्यां
संवाहनेऽपि सपदि क्लममादधानौ ।
कान्ताव वाङ्मनसगोचर सौकुमार्यौ
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸப்ரேம பீதி கமலாகர பல்லவாப்யாம்
ஸம்வாஹனேऽபி ஸபதிக்லமமாததானௌ ।
காந்தாவவாங்மநஸகோசர ஸௌகுமார்யௌ
ஸ்ரீ வேங்கடேஶ சரணௌ ஶரணம் ப்ரபத்யே ॥

ஸ்ரீ வேங்கடேச - வேங்கடரமணனே, ஸப்ரேமபீதி - ப்ரேமையுடனும், பயத்துடனும், கமலா - லக்ஷ்மியின், கரபல்லவாப்யாம் - தளிர்போன்ற கைகளால், ஸம்வாஹனே அபி - பிடிக்கப்பட்ட போதிலும், ஸபதி - உடனே க்லமம் - வாட்டத்தை, ஆததானௌ - அடைபவைகளும், காந்தௌ - அழகானவைகளும், அவாங் மனஸ கோசர ஸௌகுமார்யௌ - வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத அழகையுடையவைகளுமான, சரணௌ - உன் பாதாரவிந்தங்களை, சரணம்ப்ரபத்யே - சரணமடைகின்றேன்.

8. लक्ष्मीमहीतदनुरूप निजानुभाव
नीलादिदिव्य महिषीकर पल्लवानाम् ।
आरुण्य संक्रमणतः किल सान्द्ररागौ
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

லக்ஷ்மீ மஹீததனுரூப நிஜானுபாவ
நீலாதி திவ்ய மஹிஷீகர பல்லவானும் ।
ஆருண்ய ஸங்க்ரமணத: கில ஸாந்த்ரராகௌ
ஸ்ரீ வேங்கடேஶ சரணௌ ஶரணம் ப்ரபத்யே ॥

ஸ்ரீ வேங்கடேச - ஸ்ரீ வேங்கடேசனே, லக்ஷ்மீ - ஸ்ரீதேவி, மஹீ - பூதேவி, ததனுரூப நிஜானுபாவ - இவர்களுக்கு சமமான தன் மஹிமையை உடையவர்களான, நீலாதி திவ்ய மஹிஷீ - நப்பின்னைப் பிராட்டி முதலிய

